REGD. No: TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 812313 4 பக்கம் விலை 35 காசு

**திடமனம்**

கண்டனத்தைத் தாங்கிக் கொள்ளும் திடமனம் இல்லையென்றால் கடமையை நிறைவேற்ற முடியாது.


-பேரறிஞர் அண்ணா

# அண்ணா




**ஆற்றல்**

உண்மை நெறியிலும் துன்பத்தைச் சகிக்கும் ஆற்றலிலும் தான் நம்பிக்கை கொள்ள வேண்டும்.


-அண்ணல் காந்தி



மலர் 4 சென்னை 2-3-1980 ஞாயிறு (★)❋●❋(★) வெளியூர் 3-3-1980 திங்கள் இதழ் 114

## சட்டத்தின் பெயரால் சட்ட விரோதமாக சட்டசபையைக் கலைப்பதா?

## மீண்டும் அண்ணா அரசு அமைய

# எந்த தியாகத்துக்கும் தயார்

## புரட்சித்தலைவர் சூளுரை

சென்னை, மார்ச். 2- சட்டத்தின் பெயரால் சட்டவிரோதமாக தமிழக சட்ட சபை கலைக்கப்பட்டிருக்கிறது. சட்டமன்றத் தேர்தலில் மக்களைச் சந்தித்து மீண்டும் அண்ணா அரசு அமைத்தே தீருவோம் என்று புரட்சித்தலைவர் சூளுரைத்தார்.

நபிகள்நாயகம் பிறந்த நாள் விழாவில் புரட்சித் தலைவர் கலந்துகொண்டு பேசினார்.

கலைவாணர் அரங்கில் நடைபெற்ற இந்த விழாவிற்கு எஸ். ஏ. அஸ்கர்அலி தலைமை வகித்தார், புரட்சித் தலைவர், கா. ராஜாமுகமது, செங்கம் ஜே. ஏ. ஜப்பார், ப. நெடுமாறன், துக்ளக் சோ, டி. என். அனந்தநாயகி, திருப்பூர் மொகிதீன் மற்றும் பலர் இந்த விழாவில் பேசினார்கள்.

புரட்சித்தலைவர் பேசத் துவங்கிய போது கலைவாணர் அரங்கில் கூடி இருந்த பெரும் கூட்டம் வருங்கால முதல்வர் புரட்சித்தலைவர் வாழ்க என்று பலத்த கோஷமிட்டது. விழாவில் புரட்சித்தலைவர் பேசியதாவது:-

இங்கே பேசிய சிலரது பேச்சு சிரிக்க வைத்தது. சிலரது பேச்சு சிந்திக்க வைத்தது. சிலரது பேச்சு இரக்க உணர்வை வெளிப்படுத்தும் சூழ்நிலையில் இருந்தது.

இத்தனைக்குப் பிறகும் இந்த விழாவில் நான் பேசும் போது முதலில் பேசியவர்கள் கருத்துக்களோடு ஒத்த கருத்துக்களைச்சொல்வதோடு வேறு சில கருத்துக்களையும் விளக்குவது எனது மாபெரும் கடமை ஆகும்.

இந்த விழா நபிகள் நாயகம் பிறந்தநாள் விழா ஆகும். இந்தப் பிறந்த நாள் விழாவில் நாம் எதைப் பேசினாலும் அவை அத்தனையும் நபிகள் நாயகத்தின் வாழ்க்கையை ஒட்டியதாகவே இருக்கும்.

அரசியல், சமூகநலம், பொருளாதாரப் பிரச்சினை இவை அனைத்தும் நபிகள் நாயகத்தின் பிறந்த நாள் விழாவில் பேசப்பட்டது என்றால் நபிகள் நாயகம் சொல்லியிருப்பதை ஒட்டியதாக இருக்கிறதா என்ற கேள்விக்குப் பதில் பெறவேண்டும்.

உடன் பிறப்பு சோ அவர்கள் இங்கே பேசும் போது ஒரு வினாவை எழுப்பினார்.

மக்களுக்குச் செய்த நன்மைகளை ராசாமுகமது சொல்வது தானே என்று கேட்டார்.

அப்படிச் சொல்ல நான் விட்டால் தானே?

நான் முதலமைச்சராக இருந்ததால் அந்த முழுப் பொறுப்பும் என்னை சாந்தது ஆகும்.

மக்களுக்குத் தெரியாத ஒன்றை சொல்வது நியாயமாக இருக்கலாம்.

ஆனால்அவரவர்கள்அனுபவித்து உணர்ந்து வருவதைப்பற்றி சொல்ல வேண்டுமா என்று கருதினேம்.

இதற்கு நம்மை நாமே தொந்து கொள்வதைத் தவிர மக்களைக் குறை சொல்லிப்பயன் இல்லை.

### சாதனையை மக்கள் உணர வேண்டும்

தேர்தல் நேரத்தில் ஓட்டுக் கேட்கும் போது நமது சாதனையைசொல்லி ஓட்டுக் கேட்பதைவிட இவ்வளவுசாதனையை செய்திருக்கும் உங்களுக்கு வாக்களிக்கிறோம் என்று மக்கள் சொல்ல வேண்டும் என்று பேசி இருக்கிறேன்.

அறிவாற்றல் பெற்ற மக்கள் தமிழக மக்களிடம் நாம் செய்ததை விளம்பரப்படுத்துவது விளம்பர மதிப்பாக இருக்குமே தவிர உண்மை மதிப்பாக இராது.

### தங்கம் விலை

தங்கம்பற்றிப் பேசவில்லையா? தாலிக்குகூட தங்கம் வாங்க முடியவில்லையே என்று தாய்மார்கள் கேட்கவில்லையா?

தங்கத்தின் விலை ஏன் உயர்ந்துவருகிறதுஎன்பதை விளக்க 2 மணி நேரம் இரண்டாரை மணி நேரம் நான் பேசவில்லையா?

அதைப் புரிய வைக்கவும் முடியவில்லை. விவரங்களை தெரிந்து கொள்ளவும் இல்லை.

இங்கே பேசிய திருப்பூர் மொகிதீன் அவர்கள் தான் சினிமா பாரப்பதில்லை என்றார். நபிகள் சொல்லியிருப்பதாக அவர் கூறினார்.

நாளை பத்திரிகைகளில் எப்படி இந்த செய்தி வரும் தெரியுமா? எம். ஜி. ஆர். சினிமாவை நான் பார்த்ததில்லை என்று அண்ணன் மொகிதீன் பேசியதாக 8பத்தி தலைப்பாக செய்தி வெளிவரும்.

அண்ணன் திருப்பூர் மொகிதீன் என்னைவிட படித்தவர். தியாகம் செய்தவர். அவரது பேச்சுக்கு பதில் தருவதாக நான் சொல்வதைக் கருதக் கூடாது.

திருக்குர்ஆனில் கேளிக்கையில் ஈடுபடக் கூடாது என்று தான் சொல்லப்பட்டு இருக்கிறது.

அப்படிச் சொன்னஅந்த காலத்தில் சினிமா இல்லை. அது கண்டு பிடிக்கப்படவும் இல்லை.

மது அருந்துவது ,பெண்களை ஆட்டிப் படைப்பது, ஆடவைப்பது போன்ற கேளிக்கைகள் இருந்தன.

இவைகளில் ஈடுபடக் கூடாது என்று அறிவுரை தந்திருக்கிறது என்பதை அண்ணன் மொகிதீன் அவர்கள் அனுமதியோடு சொல்லிக்கொள்ளவிரும்பு

(2ம் பக்கம் பார்க்க)

## பேரணியினர் எழுப்ப வேண்டிய முழக்கங்கள்

நிலையான ஆட்சியைக் கேட்டவரே
நிலைத்த ஆட்சிகளை கலைத்தவரே!!

மீறாதே! மீறாதே!
அரசியல் சட்டத்தை மீறாதே!

போடாதே! போடாதே!
பொய் வழக்கு போடாதே

தலையிடாதே தலையிடாதே
நீதியில் தலையிடாதே

நியமிக்காதே நியமிக்காதே
பினாமி மந்திரிகளை நியமிக்காதே

எங்கே? எங்கே?
தங்கம் எங்கே?

எங்கே? எங்கே?
சர்க்கரை எங்கே?

எங்கே? எங்கே?
மண்ணெண்ணெய் எங்கே?

ஏறிடுச்சே ஏறிடுச்சே
அரிசி விலையும் ஏறிடுச்சே

கூடிடுச்சே கூடிடுச்சே
சர்க்கரை விலையும் கூடிடுச்சே

என்னாச்சு? என்னாச்சு?
கோதுமை வழங்கு என்னாச்சு?

என்னாச்சு? என்னாச்சு?
பூச்சி மருந்து வழங்கு என்னாச்சு?

கொல்லாதே! கொல்லாதே!
அரிசனங்களை கொல்லாதே!

விடுதலை செய்! விடுதலை செய்!
தொழிலாளர் தலைவர்களை விடுதலை செய்

எதிர்ப்போம்! எதிர்ப்போம்
சர்வாதிகாரத்தை எதிர்ப்போம்

கண்டிப்போம் கண்டிப்போம்
ஆதிக்க சக்தியை கண்டிப்போம்!

பெறுவோம்! பெறுவோம்!
மாநில உரிமைகளைப் பெறுவோம்!

காப்போம்! காப்போம்
ஜனநாயகத்தைக் காப்போம்

பஸ்களுக்கு அனுமதிமறுப்பு-அதிகாரிகள்கெடுபிடி
அனைத்தையும்மீறி தோழமைகட்சியினர் வருகை

# சென்னை நகரில் மக்கள்வெள்ளம்

சென்னை, மார்ச் 2-தமிழகம் முழுவதிலுமிருந்துகழகத் தோழர்களும்அனைத்துக் கட்சியினரும், மன்றக் கண்மணிகளும லட்சக் கணக்கில் சென்னை மாநகரில் நடக்கும் ஆட்சிக் கலைப்புக் கண்டனப் பேரணியிலும் பொதுக் கூட்டத்திலும் கலந்து கொள்ள வந்து குவிந்துள்ளனர்.

சென்னை நகரில் னும் நமது கழகத் எங்கெங்கு காணி தோழர்களும், மன்றமறவர்களும் தோழமைக் கட்சியினரும் வெள்ளம் போல் திரண்டுள்ளனர்.

எப்பக்கம் வந்து அநீதி புகுந்து விடும், இதோ இத்தனைப் பெரிய பெரிய தமிழர்பட்டாளத்தின் முன்? அநீதி என்ன செய்யும் என்று ஆர்வமுடன் அணியணியாய் தோழர்கள் திரண்டு வந்த வண்ணம் உள்ளனர்.

காலையில் சென்னை எழும்பூருக்கும், சென்டிரல ரயில் நிலையத்திற்கும் வந்த ரயில்கள் யாவும் கழகத் தோழர்கள் பெரு வெள்ளத்தையும், தோழமைக் கட்சியினரையும் சுமந்து திணறியபடி வந்தன.

வெளியூர்களிலிருந்துவந்த பஸ்களெல்லாம் கழகத் தோழர்களும் தோழமைக் கட்சியினரும் கொடியுடன் அலையலையாய் வந்த வண்ணம் இருந்தனர்.

சாலைகள் தோறும் சாரி சாரியாய் நம்மவர்கள், தோழமைக் கட்சியினர் பேரணியில் பொதுக் கூட்டத்தில் கலந்து கொள்ள பெருந்திரளாய்வந்த வண்ணம் இருந்தனர்.

சனநாயகத்தைக் காப்

(2-ம் பக்கம் பார்க்க)

## ஆட்சிக் கலைப்புக் கண்டனப் பொதுக்கூட்டம்

இன்று (2-ம் தேதி) மாலை 6 மணி அளவில் சென்னை கடற்கரை சீரணி அரங்கில் நடைபெறும் தலைவர். டாக்டர் நாவலர் கலந்துகொள்ளும் தலைவர்கள்:

புரட்சித்தலைவர்
**எம். ஜி. ஆர்.**

திரு. பா. இராமச்சந்திரன்
திரு. எம். கல்யாணசுந்தரம்
திரு பி. இராமமூர்த்தி
திருமதி அனந்தநாயகி
டாக்டர் சந்தோஷம்
திரு. குமரிஅனந்தன்
திரு. ப.நெடுமாறன்
திரு. மார்க்கபந்து
டாக்டர் அபிபுல்லாபேக்
திரு. திருவாரூர் தங்கராசு
திரு. கே. கந்தசாமி
திரு. எஸ். கே. பாலசுப்பிரமணியம்
திரு. எம். பிரான்சிஸ்ராயன்
திரு. செங்கம் ஜப்பார்
திரு. மூர்த்தி

அனைவரும் திரண்டு வாரீர்.

சர்வாதிகாரத்தை எதிர்ப்பீர்!
சனநாயகத்தைக் காப்பீர்!

-சனநாயக முற்போக்கு கட்சி

## நாஞ்சிலார்விலகல்செய்தி: புரட்சித்தலைவர் கருத்து

சென்னை, மார்ச் 2. அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகத்திலிருந்து நாஞ்சிலார் விலகி விட்டதாக யு. என். ஐ செய்தி நிறுவனம கூறியதைதொடர்ந்து புரட்சித் தலைவரிடம் நிருபர்கள் கேட்டனர் அதற்குப்பதிலளித்து புரட்சித் தலைவர் கூறியதாவது:-

எனக்குத் தெரிந்தவரை கட்சியின் பொதுச் செயலாளரான டாக்டர்நாவலருக்கு அவரின் ராஜினாமா குறித்த கடிதம் ஏதும் வரவில்லை.

என்னயிருந்தாலும்,எனது நம்பிக்கைக்கு உரிய ஒருவரை இழப்பது என்பது என்னால் நினைத்து பார்க்க முடியவில்லை.

என் உள்ளத்தில் உள்ள வேதனை அவரைஇழப்பதால் என் இதயத்தில் ஏற்படும் காலிஇடம் ஆகியவற்றை அவரைக் கொண்டே நிரப்பி விடுவேன் என்ற நம்பிக்கை எனக்கு இன்னமும் இருக்கிறது.

இது குறித்து இப்போது மேலும் சொல்ல விரும்பவில்லை.

இவ்வாறு புரட்சித்தலைவர் தெரிவித்தார்.

தோல்மண்டியில்

### 80 ஆயிரம் ரூபாய் திருட்டு

சென்னை,மார்ச்2-சென்னை பெரியமேட்டைச் சேர்ந்த ஹாஜி முகமது ஆலியார் தோல மண்டியில் இரும்புப் பெட்டியை உடைத்து 80 ஆயிரம் ரூபாய் பணத்தை சிலர் திருடிச்சென்றுவிட்டதாக கூறப்படுகிறது.

இது தொடர்பாக அந் நிறுவனத்தில் காஷியராக பணியாற்றிய முஷ்டாக் அகமது மற்றும் ஜலால் சலீம் ஆகியோரை போலீசார் தேடி வருகிறார்கள்

## விவசாயிகள் பிரச்னை இ. காங்கிரஸ் நழுவல்

2-ம் பக்கம்

# அண்ணா அரசு அமைய புரட்சித்தலைவர் சூளுரை..

(முதல் பக்கத் தொடர்ச்சி)

கிறேன்.

சினிமாவே மோசம்- மோசமான காட்சிகள் என்று கற்பனை செய்து கொள்ளக் கூடாது.

## சினிமாவில் நபிகள் கருத்து

நபிகள் நாயகம் சொல்லியிருக்கும் உபதேசங்களை-எழுத்துக்களை-அந்த தத்துவங்களை சரியான முறையில் சினிமா மூலம் விளம்பரம் செய்திருந்தால் பெரிய நன்மை கிடைத்திருக்கும்.

என்னைப் பொறுத்தவரை இப்படிப் பட்ட கருத்துக்களை நான் நடித்த படங்களில் திரும்பத் திரும்பச் சொல்லி வந்திருக்கிறேன்.

மது அருந்தக்கூடாது.

வட்டி வாங்குவது கொடுமை.

பொய்சொல்லக்கூடாது பெண்களைக்கற்பழிப்பது கொடுமை.

இப்படிப்பட்ட அறிவுரைகளை மக்களுக்குத் தரும் வகையில் நான் நடித்துள்ள படங்களின் கதை அமைப்புகள் இருக்கும்.

கற்பழித்த குற்றத்திற்கு 5 மாதம் குடித்தால 6 மாதம் ரூ. 2 ஆயிரம் அபராதம் என்று இருப்பது சரியா என்று அண்ணன் மொகிதீன் கேட்டார்.

குடிப்பவர்களுக்கு தண்டனை கடுமையாக இருக்க வேண்டும் என்று விரும்பினும்.

கற்பழிப்பவர்கட்கு அதிக தண்டனை தரப்பட வேண்டியதுதான்.

## மீண்டும் கழக ஆட்சி

நாங்கள் ஆட்சியில் தொடர்ந்து இருந்தால்- மக்கள் ஆதரவுடன் மீண்டும் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் ஆட்சிக்கு வந்து-

நானே முதல்வராக வந்தால் நிச்சயம் இப்படிப் பட்ட கொள்கைகளை நிறைவேற்றுவோம்.

1958ம் ஆண்டில் நானே இயக்கி நடித்த நாடோடி மன்னன் படத்தில் ஒரு இடத்தில், நாடோடி ஒருவன் மன்னன் ஆகிறான்.

பல திட்டங்களை சட்டமாக்க அறிவிப்பு வெளியிடுகிறான்.

கொலை செய்தால் கூட சில மனிதர்களை மன்னிக்கலாம். ஆனால் பெண்களைக் கற்பழிப்பவர்களுக்கு தூக்கு தண்டனைதர சட்டம் கொண்டு வரப்படும் என்று அந்தப் படத்தில் கூறி இருக்கிறேன்.

அண்ணன் திருப்பூர் மொகிதீன் சினிமா பார்ப்பதுஇல்லையென்றாலும் இந்தப் படத்தில்இருக்கும்இப்படிப் பட்ட காட்சிகளை மட்டுமாவது பார்க்கவேண்டும்.

வாய்ப்புக் கிடைத்தால் அவருக்குஇந்தக்காட்சிகளை யாவது போட்டுக் காட்டுவேன்.

## சட்ட மன்றப் பெருமை

சட்டமன்றங்கள் கலைக்கப்பட்டு இருக்கின்றன.

இவை ஏதோ மன்றங்கள் அல்ல, பட்டி மன்றம் அல்ல, சட்டமன்றம்.

நீதிபதிகள் தீர்ப்புக்களை வழங்க சட்டமன்றங்கள் சட்டங்களை உருவாக்குகின்றன.

சட்டத்தின் பெயரால் என்று சொல்லி சட்டத்திற்குப் புறம்பாக சட்ட சபைகளைக் கலைத்திருக்கிறார்கள்.

தண்டிப்பது யார்? யாரிடம் அதிகாரத்தை ஒப்படைப்பது? ஜனநாயகம் வளர வேண்டாமா?

தனிப்பட்டவர்எண்ணம் சட்டமாக வரக்கூடாது.

மக்கள் எண்ணம் சட்டமாக வர வேண்டும். அங்கே தான் அரசியல் வருகிறது.

அதன்படி அமையும் ஆட்சி சர்வாதிகார ஆட்சியா? ஜனநாயக ஆட்சியா என்பதுதான் பிரச்சினை.

சர்வாதிகார ஆட்சிக்கு அவசியம் இல்லை என்று நாம் சொல்கிறோம்.

நபிகள் நாயகம் போராடச்சொல்லவில்லை. இதை தற்காப்பு என்று சொல்லி இருக்கிறார்.

நாம் எடுக்கும் வழிமுறை தற்காப்புத்தான்.

## தியாகம் செய்ய சபதம்

ஜனநாயகம் தாக்கப்பட்டுள்ளது. குரல்வளை நெரிக்கப்பட்டுள்ளது.

இதை தடுக்க ஜனநாயகத்தைக் காக்க நம்மை நாமே தியாகம் செய்து கொள்வோம்.

(கைதட்டல்)

எந்தவித இடர்ப்பாடு வந்தாலும் இடுக்கண் வந்தாலும் நம்முடைய சக்தியைக் காட்டுவோம்.

(பலத்தக் கைத்தட்டல்)

இங்கே14கட்சிகள் அணி இருப்பதாகச் சொன்னார் மேலும் சில கட்சிகள் வரலாம.

ஆனால் இரண்டு கட்சிகள் இங்கே வருவதை நாம்விரும்பவில்லை. அவை தேவையும் இல்லை.

1967ம் ஆண்டில் பேரறிஞர் அண்ணா அவர்கள் யாரோடு சேர்ந்து யாரை எதிர்த்து ஆட்சிக்கு வந்தார்களோ அதே முறையில் கழகம் கொள்கை வகுத்துக் கொண்டுள்ளது.

இந்தக் கொள்கைகள் நிறைவேற ஆட்சி தேவை.

நாம் ஆட்சிக்கு வருவது யாரோ சிலர் லாபம் பெற அல்ல.

## யார் துரோகி

நாம் ஆட்சிக்கு வரும் முன்பு வக்ப் நிலங்கள் யார் யாருக்கு தரப்பட்டது என்ற விவரங்களை புத்தகத்தில் ரப்பரால் அழித்து இருக்கிறார்கள் மையைக் கொட்டி இருக்கிறார்கள்.

மற்றவர்களுக்கு தெரியக்கூடாது என்று இப்படிச் செய்து இருக்கிறார்கள்.

இவைகளைக் கேட்டால் என்னை துரோகி என்கிறார்கள்.

இந்த நன்மை செய்வதை துரோகம் என்றால் அதை திரும்ப திரும்ப செய்வேன். வேறு வழி இல்லை.

உலகில் 100கோடி முஸ்லிம்கள் இருக்கிறார்கள். இவர்கள் பிரிந்து இருக்கிறார்கள், ஒன்றுபட்டு இல்லை

ஒற்றுமையாக இருப்பது நல்லது.

## குல்லா அணிய துவங்கியது எப்போது?

குல்லாவைஎடுத்துவிட்டு வரத்தயாரா என்று கேட்கிறார்கள்.

குல்லாவை எடுக்க வெட்கப்படவில்லை.

ஆனால் நான் இந்தக் குல்லாவை எப்போது போட்டேன் தெரியுமா?

கலைஞர் கருணாநிதியின் மருமகன் மாறன் தென் சென்னை தொகுதியில் எம். பி. பதவிக்காக முதன் முதலில் நின்ற போது நான் பிரச்சாரம் செய்யப் போனேன். திருவல்லிக்கேணி பகுதியில் ஒரு இஸ்லாமிய நண்பர் அந்த வெயிலைப் பார்த்து என் தலையில் ஒரு குல்லாவை அணிவித்தார்.

வெயிலுக்கு பாதுகாப்பாக இருந்தது. பிறகு மழைக்கும் பாதுகாப்பாக இருந்தது.

தொடர்ந்து அணிய ஆரம்பித்தேன்.

எதிரிகளைப் பயமுறுத்தும் ஒன்றாகிவிட்டது. இதற்குள் துப்பாக்கி இருப்பதாகக் கூட சொல்கிறார்கள்.

(சிரிப்பு)

## ரத்தத்தின் ரத்தம்

நான் நடித்துக்கொண்டு இருந்தபோது வருமான வரி கட்ட முடியாத நிலை ஏற்பட்டது.

அப்போது தனது ரூ. 40 ஆயிரம் மதிப்புள்ளசொத்தை விற்றுத்தர ஒருவர் முன்வந்தார். அவர் ஒரு முஸ்லிம்.

நான் சொல்லும் ரத்தத்தின் ரத்தம் என்பதற்கு அர்த்தமாக இருந்தது.

நான் சுடப்பட்டுமருத்துவமனையில் இருந்தபோது எனக்கு ரத்தம் செலுத்தப் பட்டது. யார் யாரோ ரத்தம் கொடுத்து இருக்கிறார்கள். அவர்கள் யார் என்று தெரியாது.

என்னை மனிதனாக நடமாட வைக்க பலர் ரத்தம் தந்து இருக்கிறார்கள். அதனால்தான் நான் என் ரத்தத்தின் ரத்தமான உடன்பிறப்புக்களே என்கிறேன்.

நபிகள் நாயகம் விழா ஆண்டு தோறும் அல்ல, மாதம் தோறும் நடக்க வேண்டும். அதன் மூலம் நல்ல பலகருத்துக்களைச் சொல்ல வழி ஏற்படும். நாட்டுக்கு நன்மை ஏற்படும்.

இவ்வாறு புரட்சித் தலைவர் பேசினார்.

---

## தலைவரும் தொண்டரும்!

"தலைவரே!"

"என்ன?"

"நமக்கு எத்தனை இடம்?"

"இந்திராகாந்தி சொல்வார்!"

"எந்தெந்தத் தொகுதி?"

"இந்திராகாந்தி சொல்வார்!"

"யார் முதலமைச்சர்?"

"இந்திராகாந்தி சொல்வார்!"

"நாம் தி.மு.க. வா? குட்டிகாங்கிரசாகுழப்பமாக இருக்கிறதே!"

"இந்திராகாந்தி சொல்வார்!"

"இதைக்கூட நீங்கள் சொல்ல உரிமை யில்லையா?"

"மாநில சுயாட்சி வாழ்க!"

★

"தலைவரே"

"சொல்லித் தொலை!"

"சரண்சிங் பிரதமராக இருந்தாரே!"

"அதற்கென்ன?"

"நிபந்தனையற்ற ஆதரவு என்று அவரிடம் சொன்ன இந்திரா காங்கிரஸ், நிபந்தனை இல்லாமலே தனது ஆதரவை வாபஸ் வாங்கி, அவரது ஆட்சி கவிழ்ந்ததே..!"

"அதற்கென்ன?"

'தப்பித்தவறி நீங்கள் முதலமைச்சரானால்- அதே கதி உங்களுக்கும் ஏற்பட்டால்...?"

'மறப்போம்-மன்னிப்போம் என்பதற்கு மீண்டும் தயாராகுங்கள்!"

★

"தலைவரே!"

"சொல்லி அழு!"

"தப்பித்தவறி நாம் இந்திரா காங்கிரசுடன் சேர்ந்து கூட்டணி மந்திரிசபை அமைத்தால்...!"

"அமைத்தால்"?

"பேராசிரியர் அன்பழகன் மந்திரி ஆவாரா?"

"மூப்பனாரைக் கேட்க வேண்டும்?

"சாதிக்பாட்சா?..."

"சிவாஜியைக் கேட்க வேண்டும்!"

"ஆற்காடுவீராசாமி?"

"தளபதி சண்முகத்தைக் கேட்க வேண்டும்"

"இது தான் நம்ம கதியா?..."

"வாயை மூடு. காங்கிரஸ் கமிட்டி ஆபீசுக்கு ஓடு...ஒரு நாற்காலியை பிடித்துவை... நான் கதர்க்கடைக்குப் போயிட்டு நேரே அங்கே வந்துடறேன்!"

---

# சென்னை நகரில் மக்கள் வெள்ளம்

(1-பக்கத் தொடர்ச்சி)

போம் என்ற பெயரில் நிலைத்த ஆட்சியை நீடிக்க விடாமல் கலைத்ததற்குக் கண்டனம் தெரிவித்து பதினாறு கட்சிகள் அணி திரண்டு பேரணியாய் அணிவகுக்கின்றன.

'தருமத்தை சூதுகவ்வும் தருமம் மறுபடியும் வெல்லும் என்று தருமத்தின் வடிவம் புரட்சித் தலைவரும், தோழமைக்கட்சித் தலைவர்களும் இந்தப் பேரணியில் அணி வகுத்து வருகின்றனர் என்ற செய்தியை அறிந்த பொது மக்கள் அநீதிக்கு எதிராக அனைவரும் ஒரு சேரக் குரல் கொடுக்கும் போது நாமும் இணைந்து சென்று குரல் கொடுக்க வேண்டும் என்று தீவுத்திடலில் குவியத் தொடங்கியுள்ளனர்.

வெளியூர்களிலிருந்து கான்ட்ராக்ட் பஸ்களில் வருவதற்குத் திட்டமிட்டிருந்த பல்லாயிரக்கணக்கான கழகத் தோழர்களும், தோழமைக் கட்சியினரும்- பஸ்களில் வருவதற்கு அனுமதி கிடைக்காததால் கடைசி நேரத்தில் கிடைத்த ரயில்களிலும், பஸ்களிலும் ஏறி சென்னை நகருக்கு வந்த வண்ணம் உள்ளனர்.

## சூழ்ச்சிகள் தூளாகும்

பஸ்களில், லாரிகளில் தமிழகம்முழுவதிலுமிருந்து கழகத் தவரும், அனைத்துக் கட்சியினரும் வருவதற்கு எத்தனையோ இடையூறுகள், சூழ்ச்சிகள் செய்யப்பட்ட போதிலும் அவைகளையெல்லாம் தூள் தூளாக்கும் வகையில் தோழர்கள் பஸ்களிலும், ரயில்களிலும் வந்து கொண்டுள்ளனர்.

கழகத்தினரின் எழுச்சியை, எண்ணித்தை இது போன்ற இடையூறுகளால் தடுக்க முடியாது தோழமைக் கட்சியினரின் ஒருமித்த உணர்வுகளை எவராலும் ஒடுக்கிட முடியாது என்பது நிருபணமாகியுள்ளது.

ஆட்சிக் கலைப்புக்குக் கண்டனம் தெரிவிக்கும் அனைத்துக் கட்சியினர் பேரணி ஆதிக்க சக்திக்கு விடுக்கும் அறைகூவலாகத் திரண்டுள்ளது.

நல்லாட்சியைக் கலைத்தவர்கள், அதற்குத் துணைபோனவர்கள், தீயதைச் செய்துவிட்டு நயாயம் அது தான் என்று வாதாடுவோர் நாணும் வகையில், நாளைய முடிவை இன்றைய மக்கள் எழுச்சியைக் கண்டு நடுங்கும் வகையில், புல்லர்களுக்கு புத்தி புகட்டும் வகையில் பேரணி மக்கடல் சங்கமமாய் திரண்டுள்ளது.

தமிழகமே தலை நகரில் கூடியுள்ளது என்று கூறும் வகையில் கழகத்தினரும், தோழமைக் கட்சியினரும் அணி வகுத்துள்ளனர்.

எங்கும் உணர்ச்சி பெருக்கு! உற்சாகப் பெரு வெள்ளம்! எழுச்சிக் கோலம்!

மக்கள் கடல் நகர வீதிகளில் பொங்கிப் பிரவகித்து ஆர்ப்பரித்து வரும் கண் கொள்ளாக் காட்சியைக்காண அண்ணா சாலை, பீட்டர்ஸ்சாலை பகுதியில் இருபுறமும் மக்கள் குவியத் தொடங்கி விட்டனர்.

## ஆந்திரா

ஆந்திராவிலிருந்து பி. கோவர்த்தனநாத் தலைமையில் சித்தூர், திருப்பதி. நகரி, சத்தரவாடா, ஏகாம்பரகுப்பம் மற்றும் பல்வேறு பகுதிகளிலிருந்தும் ஆயிரக்கணக்கானவர்கள் வந்துள்ளனர்.

கருநாடக மாநிலம், கேரளாவிலிருந்து கழகத் தோழர்கள், பஸ்களிலும் ரயில்களிலும்வந்துள்ளனர்.

## பம்பாய்

பம்பாயிலிருந்தும் மற்ற மாநிலங்களிலிருந்தும் திரளாகக் கழகத் தோழர்கள் வந்துள்ளனர்.

## மதுரை

மதுரை மருத்துவக் கல்லூரி, அமெரிக்கன் கல்லூரி வக்ப்போர்டுகல்லூரி மதுரை கல்லூரியிலிருந்து மாணவர்கள், அமைப்பாளர் தங்கையன்தலைமையில் ஆயிரக்கணக்கானோர் வந்துள்ளனர்

## பெரியார் மாவட்டம்

பெரியார் மாவட்ட அமைப்பாளர் மா. முத்துசாமி, அழகரசன் தலைமையில் ஏராளமான தோழர்கள் வந்து பேரணியில் கலந்து கொண்டனர்.

## கோவை மாவட்டம்

கோவை மாவட்டத்தில் இருந்து திருப்பூர்மணி மாறன் கோவைத் தம்பி கோவை அண்ணா நம்பி. பேரூர் சண்முகசுந்தரம், கருப்புசாமி, மலரவன் ஆகியோர் தலைமையில் பல ஆயிரக்கணக்கான தோழர்கள் ரயில்கள் பஸ்கள் மூலம் வந்து பேரணியில்கலந்து கொண்டனர்.

---

## பஸ் பர்மிட்கள்: திடீர் ரத்து

வரலாறு காணாத வகையில் சென்னையில் இன்று நடைபெறும் ஆட்சிக் கலைப்பு கண்டனப் பேரணியில் பல்வேறு கட்சித் தொண்டர்களும், மக்களும் பங்கேற்பதை தடுக்க நடந்துள்ள சதிகள் அம்பலத்திற்கு வந்துள்ளன.

இப்பேரணியில் பங்கேற்க அண்ணா தி. மு. க. தொண்டர்களும் மற்றும் தோழமைக் கட்சியினரும் தமிழகத்தின் பல பகுதிகளிலும் பஸ்களை ஒப்பந்தம் செய்து முறைப்படி பர்மிட் பெற்றிருந்தனர்.

ஆனால் நேற்று மாலை முதல் முன்னதாகவே அளிக்கப் பட்ட இந்த பஸ் பர்மிட்களை, எந்தவித காரணமும் கூறாமல், மாவட்ட போக்குவரத்து அதிகாரிகள் ரத்து செய்து விட்டனர்.

சேலம் மாவட்டத்தில் கடைசி நேரத்தில் இவ்வாறு பல பஸ்களுக்கு பஸ் பர்மிட்கள் ரத்து செய்யப்பட்டன.

இதேபோல நாமக்கல் நகரில் இருந்து வர அண்ணா தி. மு. க. தொண்டர்களால் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த பஸ்களின் பர்மிட்களும் திடீரென ரத்து செய்யப்பட்டுள்ளதாக முன்னாள் பேரவை செயலர் நாமக்கல் அருணாசலம் தெரிவித்தார்.

## கோவை

கோவை மற்றும் சுற்றுப் புறங்களில் இருந்து சென்னை பேரணிக்குச் செல்ல கட்சித் தொண்டர்களால் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த 15க்கும் மேற்பட்ட பஸ்களின் பர்மிட்கள் திடீரென பஸ்கள் புறப்படவிருந்த நேரத்தில் ரத்து செய்யப்பட்டன.

## நெல்லை

திருநெல்வேலி மற்றும் கன்னியாகுமரி மாவட்டங்களில் இருந்து பேரணிக்காக புறப்படவிருந்த பல பஸ்களின் பர்மிட்களை அதிகாரிகள் ரத்து செய்தனர்.

இதன் காரணமாக ஆயிரக்கணக்கான தொண்டர்கள் தங்கள் பயணத்தை கைவிட வேண்டியதாயிற்று.

மதுரை நகரில் இருந்தும் பாளையங்கோட்டை நகரில் இருந்தும் இதே போல் பர்மிட்ரத்து செய்யப்பட்டதால்பல பஸ்கள் புறப்பட இயலவில்லை.

பேரணிக்காக வந்து கொண்டிருந்த பல பஸ்கள் நடுவழியில் போலீசாரால் தடுத்து நிறுத்தப் பட்டுள்ளன.

மேலிட அதிகாரிகளின் உத்தரவின் பேரிலேயே போலீசார் இந்த கெடுபிடியில் இறங்கியுள்ளதாக கூறப்படுகிறது.

இது தவிர ஆங்காங்கே இந்த பர்மிட்டுகளை வழங்கும் அதிகாரிகள் பர்மிட் வழங்குவதைத் தவிர்க்க பல முறைகளை கையாண்டுள்ள சதித்திட்டமும் தெரியவந்துள்ளது.

பர்மிட்களை பெறுவதற்காக சம்பந்தப் பட்ட அதிகாரிகளை சந்திக்கச் சென்ற போது குறிப்பிட்ட அதிகாரி, விடுமுறையில் சென்றிருப்பதாக கூறப்பட்டது.

மற்றும் சில இடங்களில் குறிப்பிட்ட அதிகாரி சோதனைக்காக வேறு இடங்களுக்குச் சென்றிருப்பதாக கூறப்பட்டது.

சென்னை பேரணியின் சிறப்பை எப்படியேனும் குறைக்க வேண்டும் என பல்வேறு வழிகளில் திட்டமிட்ட முறையில் சதி வேலைகள் நடைபெற்றுள்ளதாக தெரியவந்துள்ளது.

---

### விவசாயிகள் கவனத்துக்கு

# நழுவுவது ஏன்?

விவசாயிகள் வாங்கிய கடன் தொகைகளை வஜா செய்யும் கோரிக்கை பற்றி அரசு அனுதாபத்துடன் பரிசீலிக்கும் என்றார் ஆர். வி. சுவாமிநாதன்

(-தினமணி 24-2-80)

விவசாயிகள் மீது ஏறியுள்ள கூட்டுறவுக் கடன் சுமை குறித்து, இந்தப் பொதுக்குழு தன் ஆழ்ந்த கவலையைத் தெரிவித்துக் கொள்கிறது. இந்தக் கடனை ரத்துச் செய்யும் முழு அதிகாரத்தையும் கொண்ட மைய அரசின் விவசாய அமைச்சர் மாண்புமிகு ஆர், வி. சுவாமிநாதன் கூறியுள்ள கருத்தை இந்தப் பொதுக்குழு வரவேற்பதோடு விரைவில் விவசாயிகள் கடன் முழுவதையும் ரத்து செய்யும்படி மைய அரசைக் கேட்டு கொள்கிறது.

(-அ. இ. அண்ணா தி. மு. க பொதுக்குழு தீர்மானம், (24 2-80)

விவசாயிகள் கடனை ரத்து செய்ய, கவர்னரின் ஆலோசகருடன் மத்திய மந்திரி ஆர். வி. சுவாமிநாதன் ஆலோசனை நடத்தினார்.

(-தினகரன் 26-2-80)

அரசாங்கத்திடமும், பாங்கிகள் மூலமாகவும் விவசாயிகள் பெற்ற கடனுக்காக ஏழை விவசாயிகளைத் தொந்தரவு செய்யக் கூடாது என்று இச் செயற்குழு வேண்டுகிறது.

( - இந்திராகாங்கிரஸ் செயற்குழு தீர்மானம் 29-2 80)

குறிப்பு: கழக நண்பர்கள் இந்தச் செய்தி விவரத்தை துண்டுப்பிரசுரங்களாக அச்சிட்டு விவசாயப் பெருமக்களிடம் விநியோகிக்கலாம்.

---

## அனைத்திந்திய அண்ணா தி.மு.க. தோழர்களுக்கு வேண்டுகோள்!

புரட்சித் தலைவரின் படையில் போர்ப்பரணி பாடி வந்துள்ள கழக கண்மணிகளே!

இன்று சென்னையில் நடைபெறும் பேரணியிலும் பொதுக்கூட்டத்திலும், அண்ணாவின் அரசியல் வாரிசு நமது இதய தெய்வம் புரட்சித்தலைவரின் புகழ் பாடி, கவிஞர் தஞ்சைத் தமிழழகன் எழுதிய தங்கத் தமிழ்நாட்டு சிங்கத் தலைவர் "புரட்சித்தலைவர் எம்.ஜி.ஆர்" என்ற "அண்ணா கதிர்" சிறப்பிதழ் விற்பனைக்கு வந்துள்ளது. விலை 50 காசு. அத்தனைபேரும் வாங்கி ஆதரிக்க வேண்டுகிறேன்.

S புரட்சிமணி
ஆசிரியர்
"அண்ணா கதிர்"

1, தெற்கு மாட வீதி,
நுங்கம்பாக்கம்,
சென்னை-34.

---

### கல்லூரிகளில்

## பெண் ஆசிரியர்களின் நிலைமை: தாமோதரன் கோரிக்கை

மதுரை, மார்ச் 2- கல்லூரிகளில் பணியாற்றும் பெண் ஆசிரியர்களின் நிலைமை மோசமாக உள்ளது என மதுரை காமராஜ் பல்கலைக்கழக செனட் உறுப்பினர் என். தாமோதரன் விடுத்துள்ள அறிக்கையில் தெரிவித்துள்ளதாவது.

மாநிலத்தில் உள்ள தனியார் பெண்கள் கல்லூரிகளில் பணியாற்றும் பெண் ஆசிரியர்கள் நிலைமை மோசமாக உள்ளது.. அவர்கள் கொத்தடிமைகளாக நடத்தப் படுகிறார்கள். பள்ளத்

(7-ம் பத்தி பார்க்க)

### கணக்கு கேட்டதால் வந்த வினை

# மதுரை மாவட்ட தி.மு.க நிர்வாகிகள் கூட்டத்தில் அடிதடி-ரகளை-ஓட்டம்

மதுரை, மார்ச் 2- மதுரை மாவட்ட தி.மு க. நிர்வாகிகள் கூட்டத்தில் வரவு செலவுகளை சரிவர காட்டாததால் அடிதடி ஏற்பட்டது. இதனால் கூட்டத்திற்கு வந்த தி.மு.க. உறுப்பினர்கள் எழுந்து ஓட்டம் பிடித்தனர்

மதுரை மாவட்ட திமுக நிர்வாகிகள் கூட்டம் மதுரையில் உள்ள ஒரு ஓட்டலில் நடைபெற்றது. கூட்டத்திற்கு பழக்கடை பாண்டி, பண்டரிநாதன், காவேரி மணியம், ராமச்சந்திரன், லிங்கம், அழகர்சாமி, நெல்பேட்டை சினி ஆகியோர் வந்திருந்தனர். மாநில செயற்குழு உறுப்பினர் தாவூது கூட்டத்திற்கு வரவில்லை.

கூட்ட ஆரம்பத்தில் மாவட்ட பொதுக்குழு உறுப்பினர் நெல்பேட்டை சினி பேசும்போது இந்த மாவட்ட நிர்வாகக் கமிட்டியில் வரவு செலவு கணக்குகளை சரிவர வைக்காமல் இருக்கிறது. எனக்கு இப்போது, உடனே வரவு செலவு கணக்கு எழுதியுள்ள தஸ்தாவேஜுகளைக் கொடுக்க வேண்டும்என்று கூறினார்.

## 'நீ யாரடா கேட்க?'

உடனே பழக்கடை பாண்டி (பொருளாளர்) எழுந்து 'நீயாரடா கணக்கு கேட்பதற்கு? இதுவரை என்னை யாரும் இவ்வாறு கேட்டது கிடையாது. கருணாநிதி கூட என்னை இவ்வாறு கேட்டதில்லை" என்று கூறினாராம். இருவருக்கும் வாய் தகராறு முற்றியது. அப்போது பழக்கடை பாண்டி தான் உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து எழுந்து வந்து நெல்பேட்டை சினியின் தலைமுடியைப் பிடித்து இழுத்துக் கீழ தள்ளி அடித்தார் என்று தெரிகிறது. உடனேசினி எழுந்து பழககடை பாண்டியனை அடிகக, இருவரும் பயங்கரமாக மோதிக் கொண்டதாகக் கூறப்படுகிறது. மேலும் ஆபாசமாக திட்டிக் கொண்டனராம்.

கூட்டத்திற்குவந்திருந்த மற்ற உறுப்பினர்கள் அவர்கள் இருவரையும் சமாதானம் செய்ய முயன்றனர். ஆனால் முடியவில்லை. எனவே இக்கூட்டம் சில நாட்கள் கழித்து நடைபெறும் என்று அறிவித்துவிட்டு கிளம்பி விட்டனர் என்று கூறப்படுகிறது.

கீழ நின்று கொண்டிருந்த தி.மு.க. தொண்டர்கள் இவர்கள் சண்டையை பார்த்து அங்கிருந்து கிளம்பிச் சென்று விட்டனர்.

இம்மாதிரி தகராறு ஏற்படும் என்று தெரிந்து தான் மாவட்ட செயற்குழு உறுப்பினர் தாவூது இந்தக் கூட்டத்திற்கு வரவில்லை என்று அங்கிருந்த சில தி.மு.க பிரமுகர்கள் பேசிக் கொண்டனராம்.

---

## முன்னாள் அமைச்சர் காளிமுத்து முகவரி

கா. காளிமுத்து எம். ஏ.,
லாட்ஜ் அம்பாசிடர்
மேலப் பெருமாள்
மேஸ்திரி வீதி,
மதுரை - 625001,
தொலைபேசி: 263 37

---

## நிகழ்ச்சி குறிப்பு

கழகப் பொதுக் கூட்டம்

இடம்: அடையாறு பணிமனை எதிரில் எல். பி. ரோடு, நேரம் 3 3-80 மாலை 7 மணி

தலைமை: இரா. மூர்த்தி.

முன்னிலை: அ. ஆனந்தன்

வரவேற்பு: சி. தேவராஜ்

பேசுவோர்: ஜி. விஸ்வநாதன், டி. என். அனந்தநாயகி, புலவர் இந்திரகுமாரி, டி. கே. கபாலி. வே. தமிழ்மணி, எஸ், சிவா, டி. சிவா, நா. பார்த்தசாரதி, மாரியப்பன்.

---

3-ம் பத்தி தொடர்ச்சி

தூரில் உள்ள பெண்கள் கல்லூரி மாதக் கணக்கில் மூடிக்கிடக்கிறது. கவர்னர் இந்த பிரச்சினையில் தலையிட்டு ஆவனசெய்ய வேண்டும். இவ்வாறு தாமோதரன் தெரிவித்துள்ளார்.

14 அரிஜனங்கள் கோரக்கொலை

# ஆபத்து என்று கூறியும் பாதுகாப்புத் தர மறுத்த போலீசார்

பாட்னா, மார்ச் 2- ஜனாதிபதி ஆட்சி நடைபெறும் பீகாரில் பிப்ரா என்ற இடத்தில் 14 அரிஜன மக்கள் உயிரோடு கொளுத்தப்பட்டும் துப்பாக்கியால் சுடப்பட்டும் கொல்லப்பட்டனர் அல்லவா? முன்னதாக அவர்கள் போலீஸ் பாதுகாப்பு கேட்டும் போலீசார் மறுத்துவிட்டனர்.

பிப்ரா பகுதி விவசாயிகள், நிலச்சுவான்தாரர்களால் கொடுமைப்படுத்தப்பட்டு வந்தனர். அவர்களுக்குச் சேர வேண்டிய குறைந்த பட்சக்கூலியைக் கூட அவர்கள் கொடுப்பதில்லை.

இதன் தொடர்பாக நில திமிங்கிலங்களுக்கும் விவசாயிகளுக்கும் நீண்ட காலமாகவே மோதல் இருந்து வருகிறது. பிப்ரா கிராமத்துக்கு அப்பால் 6 மைல் தொலைவில் பூன்பூன் என்ற இடத்தில்தான் போலீஸ் நிலையம் உள்ளது.

இதற்கு இடையில் போலீஸ் புறக்காவல் நிலையம் உள்ளது.

கடந்த திங்கட் கிழமையன்று அங்கு கோரப் படுகொலை நடப்பதற்கு முன்பே போலீசாரிடம் அரிஜனமக்கள் புகார்செய்தனர். என்றாலும் போலீசார் பாதுகாப்புக் கொடுக்கவில்லை.

சம்பவம் நடந்து ஊரே சுடுகாடுபோல ஆன பிறகு ஒரு உதவி போலீஸ் சப்-இன்ஸ்பெக்டரும் 3 போலீஸ்காரர்களும் பிப்ரா கிராமத்துக்குவந்தனர்.

பெருங் கும்பல் திரண்டு வந்து தங்களை மடக்கி விடுவார்களோ என்ற அச்சத்தில் அவர்கள் அங்கு சென்றனர். ஆனால் ஊரே ஆளில்லாமல் சுடுகாடாகக் காட்சி அளித்தது.

## தந்தையைக் கொன்ற மகளுக்கு கடுங்காவல்

சென்னை, மார்ச் 2- தந்தையைக்கொலைசெய்ததாக மகளுக்கும், அவளின் காதலனுக்கும் கோர்ட்டில் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது.

மாதவரத்தைச் சேர்ந்தவர் கிருஷ்ணன் (வயது50) இவர் அங்கிருக்கும் ஓர் மாந்தோப்பில் காவலாளியாக வேலை பார்த்து வந்தார். இவர் மகள் ராதா வயது 23. சத்யா என்ற வாலிபரைக் காதலித்து வந்தாளாம்.

சம்பவத்தன்று, சத்யாவும், ராதாவும் மாந்தோப்பில் இருப்பதைப் பார்த்து கிருஷ்ணன் கண்டித்தார். இதையடுத்து, ராதாவும் சத்யாவும் சேர்ந்து கிருஷ்ணனை கொலை செய்து மரத்தில் தூக்கு போட்டு தொங்க விட்டார்களாம்.

இவ்வழக்கு குறித்து விசாரித்த செங்கல்பட்டு செஷன்ஸ் கோர்ட் நீதிபதி சத்யாவிற்கு 6வருட கடுங்காவல்தண்டனையும்ராதாவிற்கு 15மாத கடுங்காவல் தண்டனையும் விதித்துத் தீர்ப்பு கூறினர்.

தமிழகத்தில் மீண்டும்

# அண்ணா தி. மு. க.வே ஆட்சியைப் பிடிக்கும்

## காங்கிரசுக்குகருணாநிதி கடன்சுமை 'பிளிட்ஸ்' படப்பிடிப்பு

பம்பாய், மார்ச் 2-தமிழக மக்களின் ஆதரவு புரட்சித் தலைவரின்பக்கமே உள்ளதாக பம்பாயில் இருந்து வெளிவரும் பிளிட்ஸ் வார ஏடு தெரிவித்துள்ளது. சட்டசபைத் தேர்தலில் அண்ணா தி.மு.க. கூட்டணியே வெற்றிபெற்று ஆட்சியைப்பிடிக்கும் வாய்ப்பு இருப்பதாகவும் அந்த ஏடு தெரிவித்துள்ளது.

தனது கட்சிக்கு சட்டசபைத்தேர்தலில் 130 இடங்களைத் தர வேண்டும் அல்லது தனக்கு முதலமைச்சர் பதவி தர வேண்டும் என கருணாநிதிகோருவதாகவும் இதற்கு தமிழக இந்திரா காங்கிரஸ் சம்மதிக்காததால் இக் கூட்டணிக்கு ஆபத்து ஏற்பட்டிருப்பதாகவும் அப்பத்திரிகை தெரிவித்துள்ளது.

இதுபற்றி பிளிட்ஸ் பத்திரிக்கையில் எழுதப்பட்டிருப்பதாவது:

தமிழக இந்திரா காங்கிரஸ் குழப்பமான நிலையில் இருந்து வருகிறது.

கடந்த நாடாளுமன்ற தேர்தலில் இந்திரா காங்கிரசும் திமுகவும் தமிழ்நாட்டில் உடன்பாடு செய்து கொண்டு போட்டியிட்டன.

வரவிருக்கும் தமிழக சட்டசபைத் தேர்தலிலும் இக்கட்சிகள் கூட்டாக போட்டியிட முடிவு செய்துள்ளன.

இக்கூட்டணி இத்தேர்தலில் கண்டிப்பாக வெற்றி பெறும் என்றும் ஆகவே தனக்கு முதலமைச்சர் பதவி தரவேண்டும் எனவும் கருணாநிதி இந்திரா காங்கிரசிடம் வலியுறுத்திவருகிறார்.

அல்லை எனில், இதற்கு மாற்றாக மொத்தமுள்ள 234 இடங்களில் 130 இடங்களை தி. மு. க.விற்கு ஒதுக்க வேண்டும் என கருணாநிதி கோருகிறார்.

பல்வேறுமாநிலங்களிலும் இந்திரா காங்கிரஸ் ஆட்சியை திட்டமிட்டு பிடிக்க முயற்சிகள் மேற் கொள்ளும் நிலையில், தமிழக இந்திரா காங்கிரஸ்சார் கருணாநிதியின் இந்தக் கோரிக்கைகளை ஏற்றுக் கொள்ள தயாராகயில்லை.

பிரதமர் இந்திரா காந்தி தலையிட்டு இட ஒதுக்கீடு பிரச்சினையை தீர்த்தால்தான் இக்கூட்டணி நீடிக்க வழியுண்டு.

இந்திரா காங்கிரசின் கூட்டின் காரணமாக தமிழ் நாட்டில் திமுக நாடாளுமன்றத் தேர்தல்களில் வெற்றி பெறமுடித்தது என இந்திரா காங்கிரஸ் தலைவர்கள் கருதுகிறார்கள் ஆகவே கருணாநிதிக்குமுதலமைச்சர்பதவி அளிக்கும் தவறை இந்திரா காங்கிரஸ் மேலிடம் செய்யக்கூடாது எனவும் இவர்கள் கூறுகிறார்கள். கருணாநிதி மீண்டும் பதவிக்கு வருவதை தமிழக மக்கள் விரும்ப மாட்டார்கள் எனவும் இந்திரா காங்கிரசார் கூறுகிறார்கள்.

அண்ணாதி.மு.கழகம் கம்யூனிஸ்ட கட்சிகளுடனும் மற்றும் ஜனதா, காமராஜ் காங்கிரஸ், காந்தி காமராஜ் தேசிய காங்கிரஸ், மக்கள் கட்சி, அர்ஸ் கட்சிகளுடனும் கூட்டணி அமைக்க ஏற்பாடுகளை செய்து வருகிறது.

நாடாளுமன்றத் தேர்தல்முடிவுகள் அண்ணா தி.மு.க. விற்கு எதிராகயிருந்த போதிலும், அக்கட்சியின் செல்வாக்கு குறையவில்லை சாதாரண மக்களில் 30 சதவிகிதம் பேரின் ஆதரவு புரட்சித் தலைவருக்கே உள்ளது.

கருணாநிதி தான் அடுத்த முதலமைச்சர் என இந்திரா காங்கிரஸ் கூறுமானால் அண்ணா தி. மு. க வின் வெற்றி வாய்ப்பு மேலும் வலுவடையும்.

அது மட்டுமல்ல சட்டசபைத் தேர்தலில் அண்ணா தி. மு. க கூட்டணிவெற்றி பெற்று மீண்டும் ஆட்சிக்கு வந்தாலும் அது ஆச்சரியமல்ல.

இவ்வாறு பிளிட்ஸ் பத்திரிகை கருத்து தெரிவித்துள்ளது.

## இளம் பெண்ணை கடத்தியதாக ஆசாமி கைது

சென்னை, மார்ச் 2 திருமணமான இளம் பெண்ணை 25 சவரன் நகைகளுடன் கடத்திச் சென்றதாக வாலிபர் ஒருவர் கைது செய்யப்பட்டார். இது பற்றிய விவரம் வருமாறு:-

சென்னை பெரம்பூரைச் சேர்ந்தவர் சம்பத்குமார். இவருடைய மனைவி மணிமேகலை. இவர்களுக்குமோத குழந்தை ஒன்று உள்ளது.

சம்பவத்தன்று மணிமேகலையை சம்பத்குமார் வீட்டிற்கு அடுத்த வீட்டைச் சேர்ந்த செபாஸ்டின் என்பவர்சினிமாவிற்கு கூட்டி சென்றாராம். இதன் பிறகு மணிமேகலையை காணவில்லை. இதையடுத்து வந்த புகாரின்பேரில் மத்திய குற்றப் பிரிவு போலீசார் தூத்துக்குடி சென்று அங்கிருந்த செபாஸ்டியனையும மணிமேகலையும் சென்னைக்கு அழைத்து வந்தனர். செபாஸ்டின் கைது செய்யபபட்டார். மணிமேகலை கணவரிடம் ஒப்படைக்கப் பட்டாள்.

## கேள்வி-பதில்!

**கேள்வி:** 'அலை ஓசை'க்குப் பைத்தியம் பிடித்துவிட்டதாக எதை வைத்துச் சொன்னீர்கள்?

**பதில்:** அண்மைக்காலமாக அதில்வெளிவரும் செய்திகளைவைத்துத்தான்! நேற்றைய 'அலை ஓசை'யில் கூட பாருங்கள் புரியும்!

முதல் பக்கத்தில், 'அமைப்பாளர்களுக்கு போன் செய்து எம். ஜி. ஆர். கெஞ்சல்' என்று தலைப்பிட்டு ஒரு செய்தி வந்திருக்கிறது!

அந்தச் செய்தியில் முன்பகுதியில், "14 கட்சிக் கூட்டணியி உள்ளதாகக் கூறப்படும் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியும், மார்க்சிஸ்டும் இதில்(பேரணியில்) அக்கறை காட்டாது ஒதுங்கியே இருக்கிறார்கள்" என்றுஎழுதிருயிக்கிறார்கள்! ஆனால், அதே செய்தியின் கடைசிப் பகுதியில் "ஆள் பலம் மிக்க இரண்டு கம்யூனிஸ்ட் கட்சிகளுமே பேரணியில் அக்கறை காட்டி இருப்பது எம். ஜி. ஆருக்கு நடுக்கத்தை ஏற்படுத்தியுள்ளது" என்று எழுதியிருக்கிறார்கள்.

'அலை ஓசை'க்குப் பைத்தியம் பிடித்திருப்பதை இப்போதாவது ஒப்புக் கொள்கிறீர்களா?

கவர்னர் ஆட்சியில் கல்லறைக்கு செல்கிறது சட்டமும் ஒழுங்கும்

# வன்முறைவெறியாட்டம்: மக்கள்பீதி-50பேர் காயம் புகார் வாங்க நாதியில்லை

மாமல்லபுரம், மார்ச். 2- கோஷ்டிப்பூசல் காரணமாக இங்கு ஏற்பட்ட வன்முறை வெறியாட்டத்தினால் 50 பேர் படுகாயமடைந்தனர். புகார் வாங்க காவல்நிலையத்தில் அதிகாரிகள் யாரும் இல்லாததையும், சிகிச்சைபெற மருத்துவமனையும் இல்லாததும் கண்டும் மக்கள் பெரும் பீதிக்கு உள்ளாகியுள்ளனர்.

மாமல்லபுரத்தில் ஆண்டுதோறும் நடைபெறும் மாசிமகத் திருவிழாவையொட்டி இந்த ஆண்டும் பல்லாயிரக் கணக்கானோர் கூடினார்கள்.

அங்கு வந்த பொது மக்களுக்கு போதிய பாதுகாப்பு மற்றும் வசதிகள் செய்து தரப்படவில்லை.

நேற்று முன்தினம் இரவு ஏற்பட்ட கோஷ்டி தகராறில் 50-க்கும் மேற்பட்டவர்கள் படுகாய மடைந்தனர்.

இந்த கோஷ்டி மோதலில் திருக்கைவால், கத்தி, கம்பு, சைக்கிள் செயின் போன்ற பயங்கர ஆயுதங்கள் உபயோகிக்கப்பட்டன.

### போலீசில் யாருமில்லை

காயமடைந்தவர்கள் புகார் தர காவல்நிலையத்திற்கு வந்தபோது தகுந்த காவல்நிலைய அதிகாரி இல்லாததால் மோதல் பலமாக வலுத்தது முதலுதவி சிகிச்சை அளிக்க உள்ளூரில் மருத்துவமனை இல்லை.

மக்களுக்கு தகுந்த பாதுகாப்பு அளிக்கப்படாததால் பாதிக்கப்பட்டவர்களே மற்றவர்கள் மீது நேரடித் தாக்குதலில் ஈடுபட்டனர்.

சம்பவம் பற்றிய விவரம் வருமாறு:-

நேற்று முன்தினம் நள்ளிரவு சுமார் 12-30 மணிக்கு மாமல்லபுரம் கடற்கரை ஓரத்தில் 25பேர் கொண்ட குடும்பம் ஒன்று படுத்திருந்தது. இவர்கள் செங்கற்பட்டை சார்ந்தவர்கள்.

அந்தப் பக்கமாக வந்த ஒரு கூட்டம் அவர்கள் மீது மண்ணை வாரி விசினார்களாம்.

இது பற்றிவாய்ப்பேச்சில் சண்டையிட்டுக் கொண்டிருப்பவர்களின் மத்தியில் கூட்டத்தைச்சேர்ந்த ஒருவர் இடுப்பிலிருந்து பெல்ட்டை கழற்றி அடித்தாராம்.

இருதரப்பிலும் கைகலப்பு முற்றியது செங்கல்பட்டைச் சேர்ந்த குடும்பத்தின் மீது அந்த கும்பல் திருக்கைவால், கத்தி, கம்பு ஆகிய ஆயுதங்களை கொண்டு தாக்கியிருக்கலாம் என்று சொல்லப் படுகிறது.

படுகாய மடைந்த அந்த குடும்பத்தைச் சேர்ந்த 7 பேர்களும் ரத்த காயத்துடன் காவல் நிலையத்துக்கு புகார் கொடுக்க வந்தனர்.

புகாரை பெறுவதற்கு தகுந்த காவல்துறை அதிகாரி அங்கு இல்லை. அது மட்டுமில்லாமல் முதலுதவி சிகிச்சை அளிக்கக் கூட அந்த ஊரில் அரசு மருத்துவமனையே இல்லை.

மாமல்லபுரம் பல வெளிநாட்டு பயணிகளைக் கவரக்கூடிய இடம் என்பது குறிப்பிடத்தக்கது.

பலத்த காயத்திற்கு ஆளானவர்களின் உறவினர்கள் பஸ் நிலையத்திற்குச் சென்று அதிகாலை வெளியூர் செல்ல பஸ்சில் காத்திருந்தவர்களில் சில பேரைக் கீழ இழுத்துபோட்டுப் அடித்தனர்.

இதில் திருப்போரூர், திருக்கழுக்குன்றம், படாளம் ஆகியஊர்களை சேர்ந்தவர்கள் பாதிக்கப்பட்டனர்

இந்த மோதலினால் இருதரப்பையும் சேர்ந்த 50க்கும் மேற்பட்டவர்கள் ரத்தகாயம் அடைந்தனர்

இன்று காலையில் இச்சம்பவத்தைக்கேள்வியுற்ற பக்கத்து கிராம மக்கள் வழக்கம் போல் அதுகாலையில்மாமல்லபுரம செல்லும் பயணத்தை நிறுத்திவிட்டனர்.

இந்த மோதலையொட்டி மாமல்லபுரம், திருக்கழுக்குன்றம், திருப்போரூர், செங்கற்பட்டு ஆகிய ஊர்களில் பதட்டநிலை நிலவுகிறது.

Published by K. Ravindran on behalf of Thangamani Publications 275, Avvai Shanmugam Salai, Madras-14 and Printed by him at Print House, 1. 1st Main Road, United India Colony, Madras-24. Editor M. G. Chakkrapani

## பொய்ச் செய்திக்கு மறுப்பு

சென்னை, மார்ச் 2- சென்னை சூளை சட்டண்ண நாயக்கன் தெருவில் ஒரு கடையை கழகத்தினர் தாக்கியதாகவும், மற்றொருவரை கத்தியால குத்தியதாகவும் கருணாநிதியின் குடும்ப ஏட்டில் 26ம் தேதி பொய்ச் செய்தி வெளியிடப்பட்டிருக்கிறது.

அந்தநிகழ்ச்சிக்கும் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்திற்கும எந்தவித சம்பந்தமும்இல்லை என்று 61வது வட்ட கழக அமைப்பாளர் இளையக்கண்ணன் தெரிவித்துள்ளார்.

திமுகவினருக்கு சாராய வியாபாரிகள் வழக்கமான மாமூல் தராததால் ஏற்பட்ட மோதல் என்பதுதான் உண்மையாகும்.

**சந்தா விவரம்**

| | | |
|---|---|---|
| 1 வருடச் சந்தா தொகை | ரூ. | 130 |
| 6 மாதச் சந்தா தொகை | ரூ. | 65 |
| 3 மாதச் சந்தா தொகை | ரூ. | 32-50 |

3 மாதத்திற்கு குறைவான சந்தா தொகை ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது.

நிர்வாகி:

"அண்ணா"

275, அவ்வை சண்முகம் சாலை, சென்னை-6000 014


# அண்ணா



நபிகள் விழாவில்

## தமிழில் பேச மறுத்த லத்தீப் பேச முடியாது திரும்பிய பரிதாபம்

**உடுமலைப்பேட்டை, மார்ச் 2-முஸ்லிம் லீக்கைச் சேர்ந்த எம் ஏ லத்தீப்சட்டசபையில் முரண்டு பிடித்ததைப்போலவே உடுமலைப்பேட்டையில் நடைபெற்ற நபிகள் நாயகம் விழாவிலும் முரண்டு பிடித்தார். முஸ்லிம் பெருமக்கள் ஆத்திரமுற்று கண்டனக் குரல் எழுப்பி பேசக்கூடாது என்று திருப்பி அனுப்பினர்கள்.**

உடுமலைப்பேட்டையில் நடைபெற்றஇந்த நிகழ்ச்சி பற்றியவிவரம் வருமாறு:-

உடுமலைப்பேட்டையில் போலீஸ் நிலையம் அருகே உள்ள குட்டை என்ற இடத்தில் முஸ்லிம் லீக் இயக்கத்தைச் சேர்ந்தவர்களும், முஸ்லிம் பெருமக்களும் நபிகள்நாயகம் விழாவை ஏற்பாடு செய்திருந்தார்கள். இந்த விழாவில் பேசுவதற்காக முஸ்லிம் லீக்கைச் சேர்ந்த முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் எம். ஏ. லத்தீப்பையும் விழாக்குழுவினர் அழைத்திருந்தனர்.

விழாவில் பேசவேண்டியவர்கள் பேசிமுடித்தார்கள். லத்தீப் முறை வந்தது. அவரை பேசுவதற்கு அழைத்தார்கள்.

லத்தீப் நபிகள்விழாவில் உருதுமொழியில்பேசினார். துவக்கத்தில் அவர் அப்படித்தான் பேசுவாரோ என்று எண்ணி பேசாமல் இருந்தார்கள்.

லத்தீப் தொடர்ந்து உருது மொழியில் பேசுவதற்கு முற்படவே நபிகள் நாயகம் விழாவிற்கு வந்திருந்த முஸ்லிம் பெருமக்கள் தமிழில் பேசும்படி கேட்டார்கள்.

அவர்கள் இப்படிக் கேட்டதற்கு காரணம்-அவர்கள் பெரும்பாலோருக்கு உருதுமொழி தெரியாததே ஆகும்.

ஆனால் லத்தீப் தமிழில் பேச முடியாது. உருது மொழியில் தான் பேசுவேன் என்று பிடிவாதமாக கூறினாராம். புனிதமான நபிகள் விழாவில் முரண்டு பிடித்து வம்பு செய்யாதீர் தமிழில் பேசுங்கள் என்றுகூறினார்கள்.

### பிடிவாதம்

ஆனால் லத்தீப் அதை பொருட் படுத்தாமல் உருது மொழியிலேயே பேசுவதற்கு முற்பட்டார்.

இதனால் கோபமடைந்த முஸ்லிம் பெருமக்களில் முதியவர்கள் அமைதியான முறையில் கூட்டத்தைவிட்டு வெளியேறினார்கள்.

இளைஞர்கள் கூச்சல் போட்டு லத்தீப்பை பேச முடியாமல் செய்தனர்.

லத்தீப் பேச முடியாமலேயே திரும்பினார். லத்தீபின் இந்த நடவடிக்கை முஸ்லிம் பெருமக்களிடையே காட்டுத்தீபோல் பரவியது இதனால் முஸ்லிம்லீக் கட்சியைச் சேர்ந்தவர்களும் இஸ்லாமியப் பெருமக்களும்பெருங்கோபத்திற்கு ஆளாகியுள்ளனர்.

தமிழில் பேசத்தெரிந்தும் லத்தீப்பின் பிடிவாதம் முஸ்லிம் மக்களிடையே மனக்கசப்பை ஏற்படுத்தியுள்ளது.

(3-ம் பக்தி தொடர்ச்சி)

களுக்கு ரூ 50 உதவித் தொகை என்று புரட்சித் தலைவர் அறிவித்ததை உடனடியாக செயல்படுத்தவேண்டும். தவறினால் தொடர் உண்ணாவிரதப் போராட்டம்நடத்தப்படும்.

நீதிமன்றங்களில் வாலி ஒழிப்புமுறையை புரட்சித் தலைவர் கொண்டுவந்தார் அதை உடனடியாக நிறைவேற்ற வேண்டும்.

மற்றும் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

தீர்மானங்களை சட்டக் கல்லூரி மாணவர் கழக செயலர் செல்வராஜ் படித்தார்.

அழ. பால ருஷ்ணன் நன்றி கூறினார்.

புரட்சித் தலைவரை தாக்க முயற்சி

## சட்டக் கல்லூரி மாணவர்கள் கண்டனம்

புரட்சித் தலைவரை தாக்க முயற்சித்த செயலை மதுரை சட்டக்கல்லூரி மாணவர்கள் வன்மையாகக் கண்டித்துள்ளனர் தூங்கும் புலியை இடற வேண்டாம் என்று அவர்கள் எச்சரித்துள்ளனர்

மதுரை சட்டக்கல்லூரி அனைத்திந்திய அண்ணா திராவிட மாணவர் முன்னேற்றக்கழக கூட்டம் நடைபெற்றது.

மதுரை மாவட்ட மாணவர் கழக அமைப்பாளர் வழக்கறிஞர் வேராசன் செல்லப்பா தலைமை தாங்கினார்பொய்யாமொழி வரவேற்றார்.

ஜெயராமன், புகழேந்தி அழ. பாலகிருஷ்ணன், கன்னையா கணேசன், துரை. இரா. பாலகிருஷ்ணன் மற்றும் பலர் பேசினர்.

கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

புரட்சித்தலைவர் தலைமையிலான கழக அரசை, காரணமின்றி கலைத்த மத்திய அரசை இக்கூட்டம் கண்டிக்கிறது.

புரட்சித் தலைவரை தாக்க முயற்சித்ததை இக்கூட்டம் வன்மையாகக் கண்டிக்கிறது தூங்கும் புலியை இடற வேண்டாம் என்றும் எச்சரிக்க விரும்புகிறது.

வேலையில்லா பட்டதாரி

(1-ம் பக்தி பார்க்க)

## அரசு டிரைவர்களுக்கு ஏராள நன்மை செய்தது புரட்சித்தலைவர் ஆட்சி

### செயலாளர் சீனிவாசன் நன்றி

**சென்னை, மார்ச் 2-அரசு டிரைவர்களுக்கு புரட்சித்தலைவரின் அரசு நூற்றுக்கும் அதிகமான நன்மைகளைச் செய்ததற்கு தமிழ்நாடு அரசு ஊர்தி ஓட்டுநர் கழகச் செயலாளர் சீனிவாசன் நன்றி தெரிவித்திருக்கிறார்.**

இதுகுறித்து அவர் வெளியிட்டுள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது:

தமிழ் நாடு அரசு ஊர்தி ஓட்டுநர் கழகத்தின் உயிர் மூச்சான கொள்கைகள் கடமையைச் செய்வோம். உரிமையைப் பெறுவோம். போராடிப் பெறுவதை வாதாடிப் பெறுவோம், ஊழலை ஒழிப்போம், உயர்வு பெறுவோம் என்பதே. அதுபோலஇக்கழகம் அரசுக்கு ஆதரவான கொள்கைகளை உடையது என்பதும் அனைவரும் அறிவார்கள்.

திட்டங்களையும் ஆணைகளையும் சிரமேற் கொண்டு மக்களுக்கு தொண்டு செய்யும் ஊழியர்களைகொண்ட சங்கமாக தமிழ்நாடு அரசு ஊர்தி ஓட்டுநர் கழகம் (சி மற்றும் டி பிரிவுடன் இணைக்கப்பட்டது) தொடர்ந்து செயல் படும் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன். தமிழக அரசின் பொறுப்பை ஏற்ற லஞ்ச லாவண்ய மற்ற முறையில் அரசியல் குறுக்கீடுகள் இன்றி எதிர்களை பழிவாங்காமலும் ஆட்சி செய்த புரட்சித்தலைவர் அவர்களை மனமுவந்து பாராட்டுகிறேன்.

புரட்சித்தலைவர் ஆட்சி செய்த காலங்களில் அரசு ஊழியர்களுக்கும் ஊர்தி ஓட்டுநர்களுக்கும் நூற்றுக்கு மேற்பட்ட நன்மைகளைச் செய்தார். இன்னும் பல நன்மைகளை செய்யநினைத்த நேரத்தில் அவரது அரசு டிஸ்மிஸ் செய்யப்பட்டது. இருப்பினும் அவர் செய்த பல நன்மைகளுக்காகவும் செய்ய நினைத்த நல்ல மனத்துக்காகவும் இக்கழகத்தின் சார்பிலும் ஆயிரக்கணக்கான ஊர்தி ஓட்டுநர்கள் சார்பிலும் என் இதயங்கனிந்த நன்றியைப் புரட்சித்தலைவருக்கு காணிக்கையாக்குகிறேன்.

இவ்வாறு அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.



**கால்நடை பராமரிப்புத் துறை**

**மாவட்ட கால்நடைப் பண்ணை, ஒசூர்**

தருமபுரி மாவட்டம் ஒசூர் மாவட்ட கால்நடைப் பண்ணையில் 6 3.80 வியாழன் அன்று காலை 10.30 மணியளவில் 196 மாடுகள் (காளைகள், கிடாரிகள், சிந்தி கலப்பின பசுக்கள்ஜெர்சி பிற கலப்பினங்கள்) மற்றும் 53 ஆடுகள் (மாண்டியா காரேடியல் கலப்பினம்) ஆகியவை பகிரங்க ஏலத்தில் விடப்படும். ஏலம் பற்றிய விதி முறைகளைப் பெற விரும்புவோர் நேரிலோ அல்லது போதிய தபால் தலைகளை ஒட்டிய உறையுடன் கண்காணிப்பாளர் மாவட்ட கால்நடைப் பண்ணை, ஒசூர் என்ற விலாசத்திற்கு விண்ணப்பித்து பெறலாம். பண்ணையின் வேலை நேரங்களில் மேற்கண்ட கால்நடைகளை பார்வையிடலாம்.

(ஒம்) ஆ. இரட்டமுத்து

கண்காணிப்பாளர்
மாவட்ட கால்நடைப் பண்ணை, ஒசூர்
dipr-237-80-17-AAB



தொழில்கள் பாதிப்பு - உற்பத்தி பாதிப்பு

தொழிலாளர் வேலைக்கு ஆபத்து

## கழக அரசில் இல்லாத அளவுக்கு 60 சதவிகித மின்வெட்டு: அமலாகிறது

**சென்னை, மார்ச் 2- புரட்சித்தலைவர் ஆட்சிக் காலத்தில் தமிழகமககள் கண்டிராத அளவு 60 சதவிகித மின் வெட்டு ஜனாதிபதி ஆட்சியில் அமலாகியுள்ளது.**

இந்த பயங்கர மின்சார வெட்டினால் தமிழகத்தில் தொழிற்சாலைகள் பாதிக்கபடும். உற்பத்தி சரியும். தொழிலாளர்களின் வேலைக்கு ஆபத்துஏற்படும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

மின்வெட்டு பூதம் வருகிறதுவருகிறது என்றஅறிவிப்பு சில நாட்களாக இருந்து வந்தது.

நேற்று அந்தப் பூதம் வந்துவிட்டது. 60 சதவிகித மின்வெட்டு என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

ஆளுநர் தலைமையில் நடந்த நிர்வாகக்குழு கூட்டத்திற்குப் பிறகு மின்சார வெட்டு அறிவிக்கப்பட்டுள்ளது.

### அதிர்ச்சி-கவலை

இந்த 60 சதவிகித மின்சார வெட்டு அறிவிப்பு தொழில் வட்டாரங்களில் பெரிய அதிர்ச்சியையும், தொழிலாளர்தரப்பில் பெருத்த கவலையையும் ஏற்படுத்தியுள்ளது.

இன்றுமுதல்அமல் ஆகும் மின்வெட்டு விவரம் வருமாறு:-

உயர் அழுத்த மின்சாரத்தைப் பயன் படுத்தி தொடர் உற்பத்தியில் இயங்கும் தொழிற்சாலைகளுக்கு உச்ச மின்தேவையில் 40 சதவிகிதமும் அவர்கள் பயன்படுத்தும் மின்சாரத்தில் 60 சதவிகிதமும் வெட்டு.

உயர் அழுத்த மின்சாரத்தைப் பயன்படுத்தி தொடர் உற்பத்தியில் ஈடுபட்டுள்ள தொழிற்சாலைகளுக்கு மின்சார உச்சத் தேவையில் 30 சதவிகிதமும் தேவையில் 30 சதவிகிதமும் வெட்டு,

உயர் அழுத்த மின்சக்தியைப்பயன்படுத்தி நடைபெறும் இதர தொழிற்சாலைகளுக்கு மின்சார உச்சத் தேவையில்20 சதவிகிதமும் பயன்படுத்தும் மின்சாரத்தில் 30 சதவிகிதமும் வெட்டு.

இதோடு மேலும் சில கட்டுப்பாடுகளும் தடைகளும் அறிவிக்கப்பட்டுள்ளன.

குறைந்த அளவு அழுத்த மின்சாரத்தில் இயங்கும் தொழிற்சாலைகளுக்கு பகலில் ஒரு நாளைக்கு ஆறு மணி நேரம் மின்சாரம் தரப்படும்.

விளம்பர ஒளி விளக்குகளுக்கும், நியோன் விளக்குகளுக்கும் தடை விதிக்கப்பட்டுள்ளது.

25 குதிரை வேக சக்தியும் அதற்கு மேலும் உள்ளவைகளுக்கு மேற்கொண்டு புதிய இணைப்பு தடை செய்யப்படுகிறது,

இந்த புதிய மின்சார வெட்டு மருத்துவமனை கல்வி நிறுவனம், செய்தித்தாள்கள், கூட்டுறவுமுறையில் இயங்கும் விவசாய பாசன வசதிகளை கட்டுப்படுத்தாது.

வீடுகளுக்கு இந்த மின்சார வெட்டால் பாதிப்பு இராது என்றும் அறிவிக்கப்பட்டுள்ளது.

மின்சார உற்பத்திக் குறைவே இந்த வெட்டிற்குக் காரணம் என்றும் அறிவிக்கப் பட்டுள்ளது.